ஔவையார் அருளிய

# கொன்றை வேந்தன்

மூதறிஞர் வ.சுப. மாணிக்கனார்
உரையுடன்

இலவச வெளியீடு
2012

“எழுத்தெனப் படுப
அகர முதல் னகர விறுவாய்
முப்பஃ தென்ப”
- தொல்காப்பியம்

திருச்சிராப்பள்ளித் தமிழ்ச்சங்கம்

# ஆட்சிக்குழு

தலைவர்

அறநெறி அண்ணல்

**சிவ.ப. மூக்கப்பிள்ளை**

துணைத் தலைவர்

**அ. பழனியப்பன்**

அமைச்சர்

புலவர்

**சி. சிவக்கொழுந்து**

பொருளாளர்

**சு. தனேந்திரன்**

துணை அமைச்சர்கள்

**முனைவர் சி. நயினார் முகம்மது**

**மா. மாணிக்கம்**

**கி. அரங்கராசன்**

**பெ. உதயகுமார்**

# எண்ணம்

அகர முதல எழுத்தெல்லாம் ஆதி
பகவன் முதற்றே உலகு.

பெரியோர்களே சான்றோர்களே... இக்காலத்தில் வாழும் சிறார்களும், இளைஞர்களும் அறவழியில் செல்வதற்குரிய வழியறியாது திகைத்து நிற்கின்றனர். தீய வழியிலும் செல்கின்றனர். அவர்களை நல்வழிப்படுத்த அரசே மாணாக்கர்களுக்கு ஆத்திசூடி, கொன்றைவேந்தன், மூதுரை, நல்வழி போன்ற ஔவையார் அருளிச் செய்த அறநூல்களைப் பாடமாக அமைத்துக் கொடுத்தது. ஆனால், காலப்போக்கில் இவற்றை அரசே மறந்து விட்டது. மறுத்து விட்டது போலும். அதனால், மாணாக்கர்கள் மனதில் விதைத்த அறநெறி என்ற விதைகள் முளைக்காமலே போய்விட்டன.

அவ்விதையை மாணாக்கர்களின் மனதில் விதைத்தால் வருங்கால சமுதாயம் அறவழியில் சிந்திக்கும் என்ற எண்ணத்தில் எங்கள் திருச்சிராப்பள்ளித் தமிழ்ச்சங்கம் இந்நூலை இலவசமாக வெளியிடுகிறது. இதனைக் கற்று மாணாக்கர்கள் நல்வழியில் செல்ல இறைவனை வணங்குகிறோம்.

அன்புள்ள,

| தலைவர் | அமைச்சர் |
|---|---|
| சிவ.ப.மூக்கப்பிள்ளை | சி. சிவக்கொழுந்து |

# பதிப்புரை

சான்றோர்களால் தமிழ்த்தாய் என்று பாராட்டிச் சிறப்பிக்கப் பெற்றவர் ஔவையார். அவர் இயற்றிய அறநூல்கள் பல. அவை சிறுவர்க்கென அமைந்தவை. இனிமையும், எளிமையும், சொற்செட்டும், பொருள் ஆழமும் உடையவை. அவற்றில் கூறப்பெறும் கருத்துக்கள் சிறுவர்கள் உள்ளத்தில் அற ஒளி விளக்காய் ஒளிர்ந்து அவர்தம் வாழ்க்கை முழுவதும் வழிகாட்டும் என்பது உறுதி. வருங்காலக் குடிமக்களாகிய இக்காலச் சிறுவர் உள்ளங்களில் அறவுணர்வு பெருக வேண்டும் என்னும் அவாவினால் தமிழ்ச்சங்கம் அறநூற் போட்டிகள் நடத்தி வருகின்றது.

போட்டியில் பங்குபெறும் சிறுவர்கள் பாடலும் கருத்தும் அறிந்திருத்தல் வேண்டும். அதற்கேற்ப பாடலும், சங்கத்தார் எழுதிய கருத்தும் கொண்டு இந்நூல் வெளிவருகின்றது.

பாட்டுக்களை ஓசை குறையாமல் சேர்த்துப் படிக்க வேண்டும். இந்தப் பயிற்சி பின்னுக்கு நல்லது.

பெற்றோர்களும் ஆசிரியப்பெருமக்களும் தமிழ்ச் சங்கப் பணிக்குத் துணைநின்று சிறுவர் - சிறுமியர் உள்ளங்களில் அறம் ஒளிவீசச் செய்வார்கள் என்று நம்புகின்றோம்.

திருச்சிராப்பள்ளித் தமிழ்ச்சங்கம்

# கொன்றை வேந்தன்

## கடவுள் வாழ்த்து

கொன்றை வேந்தன் செல்வன் அடியிணை
என்று மேத்தித் தொழுவோம் யாமே.

(கருத்து) சிவபெருமான் திருக்குமரனாம் விநாயகக் கடவுளின் திருவடிகளை நாள்தோறும் வணங்குவோம்.

## நூல்

1. **அன்னையும் பிதாவும் முன்னறி தெய்வம்**
   தாயும் தந்தையும் கண்கண்ட தெய்வங்கள்

2. **ஆலயந் தொழுவது சாலவும் நன்று**
   கோயிலுக்குச் சென்று கடவுளை வணங்குவது மிகவும் நல்லது.

3. **இல்லற மல்லது நல்லற மன்று**
   மனைவியுடன் வாழ்ந்து செய்யும் அறமே நல்லறமாகும்.

4. **ஈயார் தேட்டைத் தீயார் கொள்வர்**
   கருமிகளின் செல்வத்தைத் தீயவர் எடுத்துக் கொள்வர்.

5. **உண்டி சுருங்குதல் பெண்டிர்க் கழகு**
   அளவாக உண்பது பெண்களுக்கு அழகைத் தரும்.

6. **ஊருடன் பகைக்கின் வேருடன் கெடும்**
   ஊராருடன் பகைத்துக் கொண்டவன் அடியோடு அழிவான்.

7. **எண்ணும் எழுத்துங் கண்ணெனத் தகும்**
கணக்கும் இலக்கியமும் மக்களுக்குக் கண்கள் போன்றவை.

8. **ஏவா மக்கள் மூவா மருந்து**
சொல்வதற்கு முன் குறிப்பறிந்து செய்யும் மக்கள் அமிழ்தத்தை ஒப்பார்கள்.

9. **ஐயம் புகினும் செய்வன செய்**
பிச்சை எடுத்தாயினும் கடமைகளை விடாமற் செய்.

10. **ஒருவனைப் பற்றி ஓரகத் திரு**
சிறந்த ஒருவனைத் துணையாய்க் கொண்டு இல்லறம் நடத்து.

11. **ஓதலின் நன்றே வேதியர்க் கொழுக்கம்**
வேதம் ஓதுவதிலும் ஒழுக்கமே சிறந்தது.

12. **ஔவியம் பேசுதல் ஆக்கத்திற் கழிவு**
பொறாமை கொண்டால் செல்வம் அழியும்.

13. **அஃகமுங் காசுஞ் சிக்கெனத் தேடு**
தானியத்தையும் செல்வத்தையும் வீண் செலவு செய்யாமல் தேடி வை.

14. **கற்பெனப் படுவது சொற்றிறம் பாமை**
பெண்களுக்குக் கற்பாவது உறுதியாக இருப்பது.

15. **காவல் தானே பாவையர்க் கழகு**
தம்மைத் தாமே காத்துக் கொள்வது பெண்களுக்கு அழகு.

16. **கிட்டா தாயின் வெட்டென மற**
விரும்பிய பொருள் கிடைக்காதென்றால் அதனை உடனே மறக்க.

17. கீழோ ராயினுந் தாழ உரை
உனக்குக் கீழ்ப்பட்டவரிடத்தும் பணிவாகப் பேசு.

18. குற்றம் பார்க்கிற் சுற்ற மில்லை
குற்றத்தையே பார்த்தால் சுற்றமே இருக்காது.

19. கூரம் பாயினும் வீரியம் பேசேல்
கூர்மையான அம்பு கையில் இருந்தாலும் வீராப்புப் பேசாதே.

20. கெடுவது செய்யின் விடுவது கருமம்
நண்பன் தீங்கே செய்யின் அவன் நட்பை விடுவது நல்லது.

21. கேட்டில் உறுதி கூட்டும் உடைமை
பொருளை இழந்தபோதும் மனம் தளராது இருந்தால் செல்வம் மீண்டும் வரும்.

22. கைப்பொருள் தன்னின் மெய்ப்பொருள் கல்வி
கையில் உள்ள செல்வப் பொருளைக் காட்டிலும் கல்விப் பொருளே சிறந்தது.

23. கொற்றவன் அறிதல் உற்றிடத் துதவி
அரசன் அறிந்திருந்தால் துன்பக் காலத்து உதவி கிடைக்கும்.

24. கோட்செவிக் குறளை காற்றுடன் நெருப்பு
கோள் சொல்லுபவனிடம் போய்ச் சொல்லும் கோள் காற்றுடன் சேர்ந்த நெருப்புப் போலப் பரவும்.

25. கௌவை சொல்லின் எவ்வருக்கும் பகை
பிறர்மேல் பழிச்சொற்களையே சொல்லிக் கொண்டிருப்பவன் எல்லோருக்கும் பகையாவான்.

26. சந்ததிக் கழகு வந்தி செய்யாமை
மலடு இல்லாமல் இருப்பது குடிக்கு அழகு.

27. சான்றோரென்கை யீன்றோட் கழகு
தன் பிள்ளைகள் சிறந்தவர்கள் எனச் சொல்லக் கேட்பது தாய்க்கு மகிழ்ச்சி.

28. சிவத்தைப் பேணின் தவத்திற் கழகு
சிவனை வழிபடுதல் ஒருவன் செய்யும் தவத்திற்குச் சிறப்பு.

29. சீரைத் தேடின் ஏரைத் தேடு
சிறப்பாக வாழ விரும்பின் உழு தொழிலைச் செய்.

30. சுற்றத்திற் கழகு சூழ விருத்தல்
இன்பத்திலும் துன்பத்திலும் கூடியிருப்பதே சுற்றத்தார்க்கு மேன்மை.

31. சூதும் வாதும் வேதனை செய்யும்
வஞ்சகமும் வழக்கும் துன்பத்தை உண்டாக்கும்.

32. செய்தவம் மறந்தாற் கைதவ மாளும்
செய்ய வேண்டிய தவத்தை மறந்தால் துன்பம் பற்றிக் கொள்ளும்.

33. சேமம் புகினும் யாமத் துறங்கு
காவல் செய்யினும் நள்ளிரவில் உறங்க வேண்டும்.

34. சையொத் திருந்தால் ஐய மிட்டுண்
இணங்கும் அளவு எப்போதும் பிச்சை அளித்து உண்பாயாக.

35. சொக்கர் என்பவர் அத்தம் பெறுவர்
பொருள் உடையவர் அறம் இன்பம் ஆகிய பேறுகளைப் பெறுவர்.

36. சோம்பர் என்பவர் தேம்பித் திரிவர்
சோம்பல் உடையவர் வறுமையால் வாடி அலைவர்.

37. தந்தை சொல்மிக்க மந்திரமில்லை
தந்தை சொல்லைவிட மேலான அறிவுரை இல்லை.

38. தாயிற் சிறந்தொரு கோயிலுமில்லை
தாயைக் காட்டிலும் வேறு கோயில் இல்லை

39. திரைகடலோடியுந் திரவியந் தேடு
கப்பல் ஏறி வெளிநாடு சென்றும் பொருளைத் தேடு.

40. தீராக் கோபம் போராய் முடியும்
தணியாத கோபம் சண்டையில் கொண்டு நிறுத்தும்.

41. துடியாப் பெண்டிர் மடியில் நெருப்பு
குடும்பத்தில் துன்பங்கண்டும் மனம் பதைக்காத பெண் மடியில் கட்டிக் கொண்ட நெருப்பை ஒப்பாள்.

42. தூற்றும் பெண்டிர் கூற்றெனத் தகும்
கணவன்மேல் பழி சொல்லித் தூற்றும் பெண் அவனுக்கு எமன் ஆவாள்.

43. தெய்வம் சீறிற் கைதவ மாளும்
கடவுளின் வெறுப்புக்கு ஆளானால் செய்த தவப்பயன் அழியும்.

44. தேடா தழிக்கிற் பாடாய் முடியும்
செல்வத்தைப் பெருக்காமல் உள்ளதைச் செலவு செய்யின் பின்பு துன்பமாக முடியும்.

45. தையும் மாசியும் வையகத் துறங்கு
பனிபெய்யும் பருவத்தில் வைக்கோலால் வேய்ந்த கூரை வீட்டில் உறங்கு.

46. தொழுதூண் சுவையின் உழுதூணினிது
பிறர்க்கு அடிமை செய்து உண்பதைக் காட்டிலும் தானே உழுது உண்பது இன்பந் தரும்.

47. தோழ னோடும் ஏழைமை பேசேல்
நண்பனிடங் கூட உன் வறுமை முதலிய எளிமையை வெளிப்படச் சொல்லாதே.

48. நல்லிணக்க மல்லது அல்லற் படுத்தும்
தீய நட்பு பெருந் துன்பத்தைத் தரும்.

49. நாடெங்கும் வாழக் கேடொன்றுமில்லை
நாடுமுழுதும் வாழ்ந்தால் யாருக்கும் துன்பம் இல்லை.

50. நிற்கக் கற்றல் சொற்றிறம்பாமை
நிலைபெறக் கற்றலாவது சொல்லும் சொல் தவறாமையாம்.

51. நீரகம் பொருந்திய ஊரகத்திரு
நீர்வளம் பொருந்திய ஊரின்கண் வாழ்.

52. நுண்ணிய கருமமும் எண்ணித் துணி
சிறிய காரியத்தையும் ஆராய்ந்து செய்க

53. நூன்முறை தெரிந்து சீலத்தொழுகு
அறநூலில் சொல்லப்பட்ட முறைகளைத் தெரிந்து நல்வழியில் நட.

54. நெஞ்சை யொளித்தொரு வஞ்சகமில்லை
நம் மனதிற்குத் தெரியாத வஞ்சகம் இல்லை.

55. நேரா நோன்பு சீரா காது
மனம் ஒன்றுபடாத தவம் செம்மையாக அமையாது.

56. நைபவ ரெனினும் நொய்ய வுரையேல்
நலிந்தவரிடத்தும் சிறுமையான சொற்களைக் கூறாதே.

57. நொய்யவ ரென்பவர் வெய்யவ ராவர்
உருவத்தால் சிறியவரும் நல்ல காரியத்தால் எல்லோராலும் விரும்பப்படுவர்.

58. நோன்பென்பதுவே கொன்று தின்னாமை
எந்த உயிரையும் கொல்லாமையும் அதன் ஊனைத் தின்னாமையுமே விரதமாகும்.

59. பண்ணிய பயிரிற் புண்ணியம் தெரியும்
பயிர் விளைச்சலின் மூலம் செய்த நன்மை தெரியும்.

60. பாலோ டாயினுங் காலம் அறிந்துண்
பால் உணவானாலும் உரியாகாலத்திற் குடி

61. பிறன்மனை புகாமை அறமெனத் தகும்
பிறன் மனைவியை விரும்பாமை தலைசிறந்த அறம் ஆகும்.

62. பீரம் பேணிற் பாரம் தாங்கும்
தாய்ப்பால் குடித்துவளர்த்த குழந்தை எப்பாரத்தையும் தாங்கும்.

63. புலையுங் கொலையுங் களவுந் தவிர்
புலால் உண்ணல், கொலை செய்தல், திருடுதல் ஆகிய குற்றங்களை நீக்கு.

64. பூரியோர்க்கில்லை சீரிய வொழுக்கம்
கீழ்மக்களிடத்தில் சிறப்பான ஒழுக்கம் அமைவதில்லை.

65. பெற்றோர்க்கில்லை சுற்றமுஞ் சினமும்
மெய்ஞ்ஞானம் பெற்றவர்க்கு உறவும் இல்லை; வெறுப்பும் இல்லை.

66. பேதைமை என்பது மாதர்க் கணிகலன்
அறியாதவர் போல் இருத்தல் பெண்களுக்குச் சிறப்பாகும்.

67. பையச் சென்றால் வையந் தாங்கும்
பண்பாக நடந்து கொண்டால் உலகத்தார் பாராட்டுவர்.

68. பொல்லாங்கு என்பவை யெல்லாந் தவிர்
தீயன என்று கூறும் அனைத்தையும் நீக்கிவிடு.

69. போனக மென்பது தானுழந் துண்டல்
உழைத்து உண்ணும் உணவே சிறந்த உணவாகும்.

70. மருந்தே யாயினும் விருந்தோ டுண்
அமுத மாயினும் விருந்தினரோடு சாப்பிடு

71. மாரி யல்லது காரிய மில்லை
மழை பெய்யாவிடில் உலகில் ஒரு செயலும் நடக்காது.

72. மின்னுக்கெல்லாம் பின்னுக்கு மழை
முன்னே மின்னல்; பின்னே மழை; முன்னே முயற்சி; பின்னே இன்பம்.

73. மீகாம னில்லா மரக்கல மோடாது
மாலுமி இல்லாமல் கப்பல் ஓடாது; தலைவன் இல்லாத குடும்பம் சிறப்பாக நடவாது.

74. முற்பகற் செய்யிற் பிற்பகல் விளையும்

முற்பகலில் நாம் பிறர்க்கு நன்மையோ தீங்கோ செய்தால் பிற்பகலில் நன்மையோ தீங்கோ நமக்கு வரும்.

75. மூத்தோர் சொன்ன வார்த்தை யமிர்தம்

பெரியோர் சொன்ன அறிவுரை அமுதம் போல் இன்பமாகும்.

76. மெத்தையிற் படுத்தல் நித்திரைக் கழகு

பஞ்சணையிற் படுத்தல் நல்ல உறக்கம் தரும்.

77. மேழிச் செல்வங் கோழை படாது.

உழவால் வரும் செல்வம் என்றும் குறையாது.

78. மைவிழி யார்தம் மனையகன் றொழுகு

பரத்தையர் வீட்டை அணுகாமல் விலகித் தூர நட.

79. மொழிவது மறுக்கின் அழிவது கருமம்

பெரியோர் சொல்வதைக் கேட்க மறுத்தால் அழிவது நிச்சயம்.

80. மோன மென்பது ஞான வரம்பு

பேச்சும் மனமும் அடங்கிய நிலையே ஞானத்தின் எல்லையாகும்.

81. வளவ னாயினும் அளவறிந் தழித்துண்

வளம் மிக்கவன் ஆயினும் வரவுக்கு ஏற்ற செலவழித்து உண்ண வேண்டும்.

82. வானஞ் சுருங்கின் தானஞ் சுருங்கும்
மழை குறைந்தால் கொடையும் குறையும்.

83. விருந்திலோர்க் கில்லை பொருந்திய வொழுக்கம்
விருந்து செய்யாதவர்கட்கு இல்லறம் சிறக்காது.

84. வீரன் கேண்மை கூரம் பாகும்
வீரனது நட்பு அம்புபோல விரைந்து உதவும்.

85. உரவோ ரென்கை யிரவா திருத்தல்
பிறரிடம் சென்று ஒன்றையும் கேட்காத உழைப்பாளரே வலியோர் ஆவார்.

86. ஊக்கமுடைமை ஆக்கத்திற் கழகு
மனம் தளராமை எல்லா முன்னேற்றமும் தரும்.

87. வெள்ளைக்கில்லை கள்ளச் சிந்தை
தூய மனமுடையவரிடத்தில் வஞ்சகம் தோன்றாது.

88. வேந்தன் சீறின் ஆந்துணை யில்லை
அரசன் கோபித்தால் யாரிடமும் உதவி கிடைக்காது.

89. வைகல் தோறும் தெய்வம் தொழு
நாள்தோறும் எழுந்தவுடன் தெய்வத்தை வணங்கு.

90. ஒத்தவிடத்து நித்திரை கொள்
நல்ல காற்றோடும் இடத்தில் நித்திரை செய்.

91. ஓதாதார்க் கில்லை உணர்வொடு ஒழுக்கம்
முறையாகப் படிக்காதவருக்குச் சிறந்த அறிவும் ஒழுக்கமும் உண்டாவதில்லை.

